# திருநபியின் தினசரி வாழ்க்கை

உர்து மூலம் :

மௌலானா **சஅத் ஹஸன் சாஹிப்**

தமிழில் :

மௌலவி, அல்ஹாஜ், அஃப்ஸலுல் உலமா,அதீபே பாஜில்

**ஜூபைர் அஹ்மது ஷுஹ்தி ஷாஹ் பைஜி பாகவி**

வெளியீடு

**காதிரிய்யா பதிப்பகம்,**

பொரவச்சேரி, நாகப்பட்டினம்

**98942 90089, 86828 48807**

## நூல் விபரம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : திருநபியின் தினசரி வாழ்க்கை |
| முதல் பதிப்பு | : ஹிஜ்ரி 1422 ஷவ்வால் , ஏப்ரல் 2002 |
| திருத்திய பதிப்பு | : ஹிஜ்ரி 1442 ஜமாதுல் ஆகிர் , ஜனவரி 2021 |
| நூலின் விலை | : |

**நூல் கிடைக்குமிடங்கள்**

மௌலவி, அல்ஹாஜ், அஃப்ஸலுல் உலமா,அதீபே பாஜில்

**ஜுபைர் அஹ்மது ஷூஹ்தி ஷாஹ் பைஜி பாகவி**

காதிரிய்யா பதிப்பகம், பொரவச்சேரி, நாகப்பட்டினம்

**98942 90089, 86828 48807**

**பஷாரத் பதிப்பகம், சென்னை**

**044 - 2522 5028, 94442 40535**

நூல் வடிவமைப்பு

மௌலவி, அப்ஸலுல் உலமா **முஹம்மது நிஜாமி பிலாலி** B.com., M.A.,

**தி டிசைனர் அபூ ஹஸீனா, சேலம்**

**90032 42269, 80729 40613**

பிஸ்மிஹீ தஆலா

# திருநபியின் தினசரி வாழ்க்கை

## முன்னுரை

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர்ரஹீம்

**நமது நாயகம் நபி முஹம்மது (ஸல்) அவர்களின் முழு சரித்திர நூற்கள் அதிகம் இருக்கின்றன. ஆனால் இந்நூல் நபி (ஸல்) அவர்களின் அன்றாட வாழ்வின் பழக்க வழக்கங்களை வரிசைப்படுத்துகிறது. மௌலானா சஅத் ஹஸன் அவர்கள் உருது மொழியில் எழுதிய திருநபியின் இரவும் பகலும் என்ற நூலின் மொழிப் பெயர்ப்பே இந்நூல் ஆகும்.**

**மக்தப், பள்ளிகள், சிறுவர் மதரஸாக்களில் பாடமாக வைப்பதற்கு ஏற்றமானதாக உள்ளது. அல்லாஹ் இந்நூலை எல்லோருக்கும் பயனுள்ளதாக ஆக்குவானாக!**

மௌலவி, அல்ஹாஜ், அஃப்ஸலுல் உலமா,அதீபே பாஜில்
**ஜுபைர் அஹ்மது**
**ஷுஹூதி ஷாஹ் பைஜி பாகவி**





# பெருமானாரைப் பின்பற்றுதல்

بِسۡمِ اللّٰهِ الرَّحۡمٰنِ الرَّحِيۡمِ

قُلۡ اِنۡ كُنۡتُمۡ تُحِبُّوۡنَ اللّٰهَ فَاتَّبِعُوۡنِىۡ يُحۡبِبۡكُمُ اللّٰهُ
وَيَغۡفِرۡ لَـكُمۡ ذُنُوۡبَكُمۡ‌ ؕ وَاللّٰهُ غَفُوۡرٌ رَّحِيۡمٌ

**நபியே! நீங்கள் சொல்லிவிடுங்கள். நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால், என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான். இன்னும் உங்கள் பாவங்களை மன்னிப்பான். (அல்குர்ஆன் 3:31)**

ஒரு மனிதர் அல்லாஹ்வின் மீது அன்பு கொண்டதற்கு அடையாளம், அவர் நாயகம் (ஸல்) அவர்களைப் பின்பற்றுவது தான். இதன் மூலம் தான் அல்லாஹ்வின் அன்பையும், மன்னிப்பையும் அடைய முடியும் என்பதையும் இந்த ஆயத்தின் மூலம் விளங்குகிறோம்.

பெருமானார் (ஸல்) அவர்களின் வாழ்வைப் பின்பற்றியவர்கள் தீனுடைய எந்த அந்தஸ்தையும் விட்டு வைக்கவில்லை. விலாயத்தின் உச்சகட்டமும் கராமத்தின் உச்சகட்டமும் பெருமானாரைப் பின்பற்றுவது தான்.

ஒரு பெரியாரிடம் நீண்ட காலமாக தங்கியிருந்தார் ஒருவர். ஆனால் ஒரு கராமத்தை (அற்புதத்தை)யும் பார்க்கவில்லை.

எனவே, உங்களிடம் இவ்வளவு நாளும் நான் ஒரு கராமத்தையும் பார்க்கவில்லையே என்று நேரடியாகவே ஒரு நாள் கேட்டுவிட்டார். அதற்கு அந்தப் பெரியவர் இத்தனை நாட்களில் பெருமானாரின் சுன்னத்துக்கு மாற்றமாக என் சொல், செயல் எதையும் கண்டீரா? என்று கேட்டார். அதற்கு இல்லை என்றார் அவர். இதை விட வேறு பெரிய கராமத்தை எதிர்பார்க்க வேண்டாம் என்று அந்தப் பெரியவர் உபதேசம் செய்ததாக வரலாறு கூறுகிறது.

ஸஹாபாக்கள் இபாதத்துகள் மட்டுமின்றி வாழ்க்கை யின் அனைத்து அம்சங்களிலும் பெருமானாரைப் பின்பற்றி நடந்தார்கள்.

அனஸ் (ரலி) அவர்கள் “ஒரு முறை நான் பெருமானார் (ஸல்) அவர்களோடு சாப்பிட்டுக் கொண்டிருந்த போது சால்னாவில் கிடந்த சுரைக்காய் துண்டுகளை ரசூல் (ஸல்) அவர்கள் தேடித்தேடி எடுத்து உண்டார்கள். அன்றில் இருந்து எனக்கு சுரைக்காய் பிரியமாகிவிட்டது'' என்று கூறுகிறார்கள். சுப்ஹானல்லாஹ்! தங்களின் விருப்பு வெறுப்புகளைக் கூட ரசூல் (ஸல்) அவர்களைப் பின்பற்றி மாற்றிக் கொண்டார்கள்.

அபூ அய்யூப் அன்சாரி (ரலி) அவர்கள் ரசூல் (ஸல்) அவர்கள் “வேக வைத்த பூண்டு கலந்த உணவைப் பிரியப்படுவதில்லை” என்று தெரிந்தவுடன் தாங்களும் அத்தகைய உணவுகளை சாப்பிடுவதை நிறுத்திக் கொண்டார்கள்.

ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள், ரசூல் (ஸல்) அவர்கள் ஒரு வகைத் தோலால் ஆன காலணிகளை அணிவதை பார்த்தபின் தாங்களும் அதே வகைப் பாதணிகளை அணிந்து கொள்ளும் பழக்கத்தை கடைபிடித்தார்கள்.

ஆக பெருமானார் அவர்களை அப்படியே அணு அணுவாகப் பின்பற்றக் கூடியவர்களாக ஸஹாபாக்கள் இருந்தார்கள்.

ஹஜ்ரத் அபூ ஸல்மா (ரலி) அவர்கள், அபூ சயீத் குத்ரீ (ரலி)

அவர்களிடம் உண்ணுதல், பருகுதல், உடுத்துதல் இவையாவும் உலக விஷயங்களா? இவற்றில் தீனின் சம்பந்தம் இல்லையா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் உண்ணுங்கள் அல்லாஹ் விற்காக வேண்டி, குடியுங்கள் அல்லாஹ்வுக்காக வேண்டி, பயணம் செய்யுங்கள் அல்லாஹ்வுக்காக வேண்டி என்று கூறினார்கள். அதாவது: இவை அனைத்திலும் அல்லாஹ் ரசூலின் வழிகாட்டுதலின் படி நடந்தால் அவர்களின் திருப்தியை ஆதரவு வைத்து செயல்பட்டால் இதுவும் தீனின் காரியமாகவே ஆகிவிடும்.

ஆனால் கைசேதம் இன்று நாம் பெருமானாரின் சுன்னத்து களின் பக்கம் கவனமே செலுத்துவதில்லை, சிலரோ, இபாதத்து கள் வணக்க வழிபாடுகளில் மட்டும் சுன்னத்தைப் பேணி நடந்தால் போதும் என்று எண்ணுகிறார்கள். சிலரோ தனக்குத் தானே ஆயிரம் சாக்கு போக்குகளை சொல்லிக் கொண்டு சுன்னத்தைப் புறக்கணிக்கிறார்கள். இஸ்லாம் அருளிய நெறிமுறைகளை விட்டு விட்டு நாகரீகம் என்ற பெயரில் எதை எதையோ செய்கிறார்கள்.

பின் அல்லாஹ், ரசூலின் நேசம் இருப்பதாக எவ்வாறு கூற முடியும்?

சிலர் கூறுகிறார்கள் :- சாப்பிட்டபின் விரலைச் சூப்புவது சந்தேகமின்றி சுன்னத்துதான். ஆனால் தற்கால நாகரீகத்துக்கு ஒத்து வருமா? பூமியில் அமர்ந்து சாப்பிடுவது தான் சுன்னத்து. ஆனால் சேர், டேபிளில் அமர்ந்து சாப்பிடுவது தானே இன்றைய கலாச்சாரம். சாப்பிட்ட பின் கையைக் கழுவி கையின் ஈரத்தை முகம் கைகளில் தேய்த்துக் கொள்வது சுன்னத்து தான். எனினனும் அது நமக்கு டீசண்டாக தெரியவில்லையே.

(நவூதுபில்லாஹ், அஸ்தஃபிருல்லாஹ்)

இவர்களுக்கெல்லாம் எவர்களின் பழக்க வழக்கள் டீசண்டாக தெரிகிறது தெரியுமா?

பன்றிக்கறி தின்பவர்கள், மானம் மரியாதையின்றி மிருகங்களைப் போல், ஆணும் பெண்ணும் மறைவில் செய்ய வேண்டியவற்றை வெளியே தெருவில் செய்து கொண்டு திரிபவர்கள், சமுதயாத்தில் பெரும்பாலோர் திருமணமே இல்லாமல் அப்படியே சேர்ந்து விபச்சார வாழ்க்கை புரிந்து கொண்டிருப்பவர்கள், சிறுநீர் கழித்து விட்டு துப்புரவு செய்யாமல் அப்படியே செல்பவர்கள். இவர்கள் எல்லாம் நாகரீகம் மிக்கவர்களாக நம் கண்ணுக்கு தெரிகிறார்கள்.

உலகத்திற்கே ஒழுக்கத்தை கற்பித்த உத்தம திரு நபி (ஸல்) அவர்களின் பழக்க வழக்கங்கள் நமக்கு நாகரீகமாக தெரியவில்லையா? எங்கே போய்க் கொண்டிருக்கிறோம் நாம்.

சிலரோ இது சுன்னத்துதானே! பர்ள் அல்லவே! என்கிறார்கள். சைய்யிதினா ஹஸன் பஸரீ (ரலி) அவர்களின் சபையிலே ஒருவர் ஒரு விஷயத்தைப் பற்றி இது சுன்னத்து தானே என்று கூறிவிட்டார். உடனே கோபம் கொண்ட ஹஸன் பஸரீ (ரலி) அவர்கள் எழுந்து செல் உன் வாயில் குஃப்ரின் (இறை மறுப்பின்) வாடை வீசுகிறது என்று கூறினார்கள். ஒரு சுன்னத்தான விஷயத்தை சாதாரணமாக கருதுவது குஃப்ருக்கு நெருக்கமான பாவமாகும்.

பெருமானாரின் பழக்க வழக்கங்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று அதைச் செய்தால் – ஸவாப் – நன்மை உண்டு. செய்யாவிட்டால் பாவம் இல்லை. உதாரணமாக நபி(ஸல்) அவர்கள் வலது பக்கம் ஒருக்கணித்து படுத்து உறங்குவார்கள். ஒரு மனிதர் இது சுன்னத் என்பதற்காக தானும் அவ்வாறே தூங்கினால் அவருக்கு நிச்சயம் ஸவாபு நற்கூலி உண்டு. மாறாக இடது பக்கம் திரும்பித் தூங்கினால் பாவியாகமாட்டார். ஆனால் சுன்னத்துடைய ஸவாபை இழந்தவராகிறார்.

இன்னொரு வகை அதைச் செய்தால் ஸவாபு கிடைக்கும்

அதற்கு மாற்றமாக செய்தால் தண்டனை கிடைக்கும். உதாரணமாக, நபி (ஸல்) அவர்கள் எப்போதும் கீழ் ஆடையை கரண்டை மூட்டுகளுக்கு மேலே உயர்த்தி கெண்டைக் காலின் பாதியில் கட்டுவார்கள். ஒருவர் இந்த சுன்னத்துக்கு மாற்றமாக கைலியையோ, பைஜாமாவையோ, பேண்டையோ கரண்டை மூட்டுகளை மறைக்கும் படி அணிந்தால் அவர் பாவம் செய்தவாகிறார். அவ்வாறு அணிவதை நபி (ஸல்) அவர்கள் கடுமையாக கண்டித்து இருக்கிறார்கள். கரண்டை மூட்டுக்குக் கீழே எதுவரை ஆடை இறங்கியதோ, அவ்விடத்தில் இருந்து நரக நெருப்பு அவரைத் தீண்டும் என்றும் யார் தன் கீழாடையை கரண்டை மூட்டுக்குக் கீழே அணிகிறாரோ அவரை கியாமத்து நாளில் அல்லாஹ் அருள் கண் கொண்டு பார்க்கமாட்டான் என்றும் ஹதீஸில் வருகிறது.

செருப்பு, பூட்ஸ்களில் ஒட்டியிருக்கும் அசுத்தங்கள் எல்லாம் பேண்டை கீழே வரை அணிந்து கொண்டு இது தான் பேஷன் என்று சொல்லித் திரிபவர்கள் இஸ்லாம் கற்றுத் தந்த பேஷன்களை பின்பற்றிப் பார்க்கட்டும். அதில் தான் அவர்களின் மதிப்பும், மரியாதையும், உயர்வும், கண்ணியமும் அடங்கியுள்ளது.





## பெருமானாரின் உணவு உண்ணும் ஒழுக்கங்கள்

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ. وَالصَّلَاةُ وَالسَّلَامُ عَلٰى رَسُوْلِنَا رَحْمَةً لِّلْعَالَمِيْنَ

اَشْهَدُ اَنْ لَّا اِلٰهَ اِلَّا اللهُ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ وَرَسُوْلُهٗ

1. நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் சாப்பிடுவதற்கு முன்பு தங்கள் இரு கைகளையும் மணிக்கட்டு வரை கழுவுவார்கள்.

2. எப்போதும் வலது கையாலேயே சாப்பிடுவார்கள்.

3. தட்டிலே தனக்கு முன்பக்கமிருந்தே உண்ணுவார்கள்.

4. நபியவர்கள் சாய்ந்துக் கொண்டு எப்போதும் சாப்பிட்டதில்லை.

5. சாப்பிடும் போது தொழுகையில் அமர்வது போல் கால்களை மடக்கி அமர்ந்து சாப்பிடுவார்கள். அல்லது இரண்டு கால்களையும் நட்டு வைத்து அமர்ந்து உண்ணுவார்கள். அல்லது குத்த வைத்து இரண்டு பாதங்களையும் ஒட்டி வைத்து உட்கார்ந்து சாப்பிடுவாாகள்.

6. நாற்காலி, மேஜை போட்டு ஒரு காலமும் சாப்பிட்டதில்லை. கீழே விரிப்பை விரித்து அதிலே உணவுத்தட்டை வைத்து சாப்பிடுவார்கள்.

7. பெரும்பாலும் மூன்றே விரல்களைக் கொண்டு தான் சாப்பிடுவார்கள். அதாவது பெருவிரலையும் அதை ஒட்டிய

இரண்டு விரல்களையும் மட்டுமே பயன்படுத்துவார்கள். உணவு இலகுவாக இருந்தால் சில நேரங்களில் அதற்கு அடுத்த விரல்களையும் பயன்படுத்துவார்கள்.

8. சாப்பிட்ட பின் விரல்களை நன்றாகச் சூப்புவார்கள். முதலில் நடுவிரலையும் அடுத்து சுட்டு விரலையும் அடுத்து பெருவிரலையும் சூப்புவார்கள்.

9. பெரிய தட்டில் உணவு குவியலாக வைக்கப்பட்டிருந்தால் மேல்புறத்திலிருந்து உணவை எடுக்கமாட்டார்கள். தன் பக்கத்தில் கீழ் இருந்து எடுப்பார்கள். உணவில் பரகத் (இறைஅருள்) நடுவில் இருக்கிறது. அது கடைசி வரை இருக்க வேண்டும் என்று கூறுவார்கள்.

10. பெரிய தட்டில் பலரோடு அமர்ந்து உண்ணுவார்கள். சிறிய சிறிய தட்டுகளில் வகை வகையான உணவுகளை வைத்துக் கொண்டு செல்வந்தர்களைப் போல உண்ணுவதை அவர்கள் பிரியப்பட்டதில்லை.

11. நபியவர்கள் ஹல்வா போன்ற இனிப்புப் பண்டங்கள் இன்னும் சுரைக்காய், தேன், வெள்ளரிப்பிஞ்சு, பேரீத்தம்பழம், தர்பூசணி, சிர்கா (காடி) இவற்றை மிகவும் விரும்பி உண்பார்கள்.

12. இறைச்சியிலே பெருமானாருக்கு முன்சப்பை, கழுத்து இன்னும் முதுகு இவற்றின் இறைச்சி மிகவும் பிரியமாக இருந்தது.

13. சில நேரங்களில் தர்பூஷ்பழம், பேரீட்சை இரண்டையும் சேர்த்துச் சாப்பிடுவார்கள். அதைப் போல் பேரீட்சையுடன் ரோட்டி அல்லது வெள்ளரிப்பழம் அல்லது எள் இவற்றை சேர்த்துச் சாப்பிடுவார்கள்.

14. ஏதாவது உணவு அவர்களுக்குப் பிரியம் இல்லையென்றால் குறை சொல்லமாட்டார்கள். மௌனமாக இருப்பார்கள் சாப்பிடுவதை விட்டு விடுவார்கள்.

15. நபியவர்கள் பச்சை வெங்காயம், பச்சை பூண்டை

சாப்பிடமாட்டார்கள்.

16. சல்லடையில் சலிக்கப்படாத மாவில் தான் ரொட்டி சாப்பிடுவார்கள். சலிக்கப்பட்ட மாவு மைதா மாவு போன்றவைகளின் ரொட்டியை சாப்பிட்டதில்லை.

17. பேரித்தம்பழம் ரொட்டித் துண்டு போன்றவை சுத்தமான இடங்களில் கீழே கிடந்தால் எடுத்து சுத்தம் செய்து சாப்பிடுவார்கள்.

18. மிகவும் சூடான ஆவி பறக்கும் நிலையில் உள்ள உணவுகளை உண்ணமாட்டார்கள். ஆற வைத்தே உண்ணுவார்கள். மிகவும் சூடான உணவுகளில் பரக்கத் (இறை அருள்) இல்லை என்று சொல்லியிருக்கிறார்கள்.

19. உணவு பொருட்களை நுகர்ந்து பார்க்கமாட்டார்கள்.

20. உணவை எப்பொழுதும் அமர்ந்து தான் சாப்பிடுவார்கள். ஆனால், பழங்கள் போன்ற தின்பண்டங்களை நின்று கொண்டும் சில நேரங்களில் சாப்பிட்டுள்ளார்கள்.

21. சாப்பாட்டுக்குள் விரல் முழுவதையும் நுழைக்க மாட்டார்கள்.

22. உணவு பாத்திரங்களை எப்போதும் மூடியே வைப்பார்கள். காலிப் பாத்திரங்களையும் எப்போதும் மூடியே வைப்பார்கள். மூடுவதற்கு எதுவும் கிடைக்காவிட்டால் ஒரு குச்சியையாவது குறுக்கே வைப்பார்கள்.

23. சபையிலே உணவு பண்டங்கள் பங்கிடும் போது வலது புறத்தில் இருப்பவர்களுக்கே முதலில் கொடுப்பார்கள். இடது புறத்தில் இருப்பவர்களுக்கு முதலில் கொடுக்க விரும்பினால் வலது புறத்தோரிடம் அனுமதி வாங்கிக் கொள்வார்கள்.

24. காலைக்கு வேண்டிய உணவை மாலையிலேயே எடுத்து வைக்கமாட்டார்கள். அதே போல மாலைக்கு வேண்டிய உணவை காலையிலேயே எடுத்து வைக்க மாட்டார்கள்.

25. சால்னாவில் (குழம்பில்) கடைசியில் மீதமாவதை மிகவும் பிரியப்படுவார்கள். சில நேரங்களில் அதை குடித்தும் விடுவார்கள்.

26. வீட்டுக்கு இறைச்சி வந்தால் அதிலே சால்னா வைக்க சொல்வார்கள். அப்போது தான் பக்கத்து வீட்டினருக்கும் கொடுக்க முடியும் என்பதற்காக. (வறுத்தால், பொரித்தால் கொஞ்சமாக வரும் சால்னா அதிகம் வரும்)

27. உணவுப் பொருட்களை நபியவர்கள் வாயால் ஊத மாட்டார்கள்.

28. சில நேரங்களில் தர்பூஷ் பழத்தை சர்க்கரையுடன் சேர்த்து சாப்பிடுவார்கள்.

29. சில நேரங்களில் இரண்டு பழங்களை ஒன்றாக சாப்பிடுவார்கள். வலது கையில் பேரித்தம்பழத்தையும் இடது கையில் தர்பூஷ் பழத்தையும் வைத்துக் கொண்டு மாறி மாறி சாப்பிடுவார்கள்.

30. பேரித்தம்பழம் சாப்பிட்டால் கொட்டையை இடது கையால் எடுத்து எறிவார்கள். நடுவிரல், சுட்டு விரல் இந்த இரண்டுடைய பிற்பகுதியில் வைத்து எறிந்து விடுவார்கள்.

31. சில நேரங்களில் வெள்ளரிப்பிஞ்சோடு உப்பை சேர்த்து சாப்பிடுவார்கள்.

32. நபியவர்களிடம் புதுவகை உணவு வந்தால் முதலில் அதன் பெயரைக் கேட்டு தெரிந்துக் கொள்வார்கள் அதன் பின் சாப்பிடுவார்கள்.

33. நபியவர்களின் உணவிலே யஹூதிகள் விஷம் வைத்த நிகழ்ச்சிக்குப் பின்னால் யாராவது புதிய நபர்கள் உணவு கொண்டு வந்தால் முதலில் அவர்களை சிறிது சாப்பிட சொல்லி அதன் பின் தாங்கள் சாப்பிடுவார்கள்.

34. எலும்போடு சேர்ந்த இறைச்சியை பிரியத்தோடு

உண்பார்கள்.

35. யாராவது விருந்துக்கு அழைத்து நபியவர்கள் செல்லும் போது அப்பொழுது அழைப்பில்லாத நபர் நபியுடன் இருந்தால் விருந்து தருபவரிடம் அவருக்காக அனுமதி கேட்ட பின்பே அழைத்துச் செல்வார்கள்.

36. விருந்து அளிக்கும் போது தங்கள் விருந்தாளிகளிடம் இன்னும் சாப்பிடுங்கள் இன்னும் சாப்பிடுங்கள் என்று சொல்லுவார்கள்.

37. பலருடன் உணவு அருந்தும்போது நபியவர்கள் தான் கடைசியாக எழுந்திருப்பார்கள். இடையில் எழுந்தால் மற்றவர் களும் வெட்கப்பட்டு சரியாக சாப்பிடமாட்டார்கள் என்பதால் வேண்டுமென்றே கொஞ்சம் கொஞ்சமாக மெதுமெதுவாக சாப்பிடுவார்கள்.

38. சாப்பிட ஆரம்பிக்கும்போது பிஸ்மில்லாஹ் சொல்லுவார் கள். அடுத்த பிடி உண்ணும் போதும் சொல்லுவார்கள். இவ்வாறு மூன்று கவளம் வரை சொல்லுவார்கள்.

39. யாராவது பிஸ்மில்லாஹ் சொல்லாமல் சாப்பிட்டால் கையை பிடித்து கொள்வார்கள். பிஸ்மில்லாஹ் சொல்லும்படி வற்புறுத்துவார்கள்.

40. யாரும் இடது கையில் உணவை எடுத்தால் கையை தட்டி விடுவார்கள். வலது கையில் உண்ணும் படி கூறுவார்கள்.

41. தட்டில் ஒரு வகை உணவு மட்டும் இருந்தால் தன் பக்கம் இருந்து மட்டும் எடுத்து உண்பார்கள். பல வகை உணவுகள் இருந்தால் அல்லது பழங்கள் வைக்கப்பட்டிருந்தால் அப்போது மற்ற புறங்களில் எடுத்து சாப்பிடுவார்கள்.

42. பழைய பேரித்தம் பழங்களை சாப்பிட்டால் முதலில் உள்ளே சுத்தம் செய்துக் கொள்வார்கள்.

43. சாப்பிட்ட பின் இரண்டு கைகளையும் நன்றாக

கழுவுவார்கள். கழுவியபின் ஈரத்தை முகத்திலும் கைகளிலும் தேய்த்துக் கொள்வார்கள்.

44. கோழி சாப்பிட விரும்பினால் பல நாட்களுக்கு முன்பே வெளியில் அவிழ்த்து விடாமல் கட்டிப் போடச் சொல்லுவார்கள். அதன் பின் அறுத்து சாப்பிடுவார்கள்.

45. இறைச்சி சால்னாவில் ஊற வைத்த ரொட்டித் துண்டு களை பிரியமாக சாப்பிடுவார்கள்.

46. வெண்ணையும் பேரித்தம்பழமும் சேர்த்து விரும்பி உண்பார்கள்.

47. பாலுடன் பேரித்தம்பழம் சாப்பிடுவார்கள். இரண்டும் உயர்ந்த பொருட்கள் என்று கூறுவார்கள்.

48. உணவில் முதல் கவளம் வாயில் வைத்தவுடன்

يَا وَاسِعَ الْمَغْفِرَةِ

**“விசாலமான மன்னிக்கும் தன்மைக் கொண்ட இறைவனே!”** என்று கூறுவார்கள்.

49. சாப்பாடு அருகில் வந்தவுடன்

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِي مَا رَزَقْتَنَا وَقِنَا عَذَابَ النَّارِ

**“இறைவா! நீ எங்களுக்கு வழங்கியவற்றில் பரக்கத் (அபிவிருத்தி) செய்வாயாக! இன்னும் நரக வேதனையை விட்டும் எங்களை பாதுகாப்பாயாக!”** என்று கூறுவார்கள்.

50. சாப்பிட்டு முடித்தவுடன்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَطْعَمَنَا وَسَقَانَا وَجَعَلَنَا مِنَ الْمُسْلِمِيْنَ

**“எங்களுக்கு உணவும் நீரும் தந்து எங்களை முஸ்லீமாக ஆக்கிய இறைவனுக்கே புகழனைத்தும்”** என்று கூறுவார்கள்

51. யாரும் விருந்தளித்தால்

اَللّٰهُمَّ بَارِكْ لَهُمْ فِيْمَا رَزَقْتَهُمْ وَاغْفِرْ لَهُمْ وَارْحَمْهُمْ

**இறைவா! அவர்களுக்கு நீ வழங்கியதில் பரக்கத்**

(அபிவிருத்தி) செய்வாயாக இன்னும் அவர்களை மன்னித்து அருள்புரிவாயாக! என்று கூறுவார்கள்.

52. சாப்பாடு முடிந்து விரிப்பை எடுத்தவுடன்

اَلْحَمْدُ لِلّٰهِ حَمْدًا كَثِيْرًا طَيِّبًا مُبَارَكًا فِيْهِ غَيْرَ مَكْفِيٍّ وَلَا مُوَدَّعٍ

وَلَا مُسْتَغْنًى عَنْهُ

என்ற துஆவை ஓதுவார்கள்.







## பெருமானார் பருகும் ஒழுக்க முறைகள்



53. பெருமானார் தண்ணீர் குடித்தால் பாத்திரத்தில் வாய் வைத்து சப்தம் இல்லாமல் மெதுவாக உறுஞ்சிக் குடிப்பார்கள். கடக், கடக் என்று சப்தம் வரும்படி குடிக்கமாட்டார்கள்.

54. இனிப்பான தண்ணீர் நபியவர்களுக்கு மிகவும் பிரியமாக இருந்தது. தூர தூரமான இடங்களில் இருந்தும் இனிப்பான தண்ணீரை வரவழைத்துப் பருகுவார்கள்.

55. மனைவிமார்களிடம் மிகவும் அன்புடன் பழகும் நபியவர்கள், அவர்கள் எந்தப் பாத்திரத்தில் எந்த இடத்தில் வாய் வைத்துப் பருகுவார்களோ அதே பாத்திரத்தில் அதே இடத்தில் வாய் வைத்து தாங்களும் பருகுவார்கள்.

56. பருகும் பொருட்களில் நபியவர்களுக்கு பால் மிகவும் பிரியமாக இருந்தது.

57. பாலுடன் சிலவேளை குளிர்ந்த தண்ணீரைக் கலந்து பருகுவார்கள். சில நேரங்களில் அப்படியே குடிப்பார்கள்.

58. ஓரிரு முறை தண்ணீர் வைக்கும் பெரிய தோல் பைகளில் அல்லது பெரிய வாளிகளில் வாய் வைத்துக் குடித்துள்ளார்கள்.

59. சபைகளில் ஏதேனும் பருகும் பொருட்கள் வந்தால் முதலில் வயதில் பெறியவர்களுக்குக் கொடுத்து ஆரம்பம் செய்வார்கள்.

60. சபைகளில் வரிசையாக குடித்து வரும்போது கோப்பை காலியாகி விட்டால் மறுகோப்பை வந்தவுடன் அதே வரிசையில் விட்டவரிடம் இருந்து ஆரம்பிப்பார்கள்.

61. சபைகளில் தன் தோழர்களுக்கு பருகும் பொருட்களை வழங்கினால் நபியவர்கள் எல்லோரையும் விட கடைசியாகக்

குடிப்பார்கள். குடிப்பாட்டுபவர் எல்லோரையும் விட கடைசியாகக் குடிக்க வேண்டும் என்று கூறுவார்கள்.

62. நபியவர்குளு: போது மக்கள் பயன்படுத்தும் ஆறுகள், ஏரிகள், ஓடைகளில் இருந்து தண்ணீர் வரவழைத்து அருந்துவார்கள். ஏனேனில் முஸ்லிம்கள்களின் கைகளின் பரகத்தை அருளை பெற விரும்புவார்கள்.

63. நபியவர்கள் மண், செம்பு, மரம், பளிங்கு போன்றவற்றால் ஆன பாத்திரங்களில் தண்ணீர் பருகியிருக்கிறார்கள்.

64. பார்லியில் கஞ்சி செய்து சாப்பிட்டுள்ளார்கள்.

65. ஒரு முறை பாதாம் பருப்பின் கஞ்சி நபியவர்களுக்கு கொண்டு வரப்பட்டபோது, இது பணக்காரர்களின் உணவு என்று கூறி பருக மறுத்துவிட்டார்கள்.

66. பாலும், தேனும் கலந்த பானத்தை பருகமாட்டார்கள். ஒரு கோப்பையில் இரண்டு பானங்கள் எதற்கு என்பார்கள். அதாவது அதை வீண் விரயம் என்று கருதுவார்கள்.

67. தண்ணீர் மற்றும் பானங்களை எப்போதும் அமர்ந்துதான் குடிப்பார்கள். ஏதோ சில நேரங்களில் ஓரிரு முறை நின்றும் குடித்துள்ளார்கள்.

68. தண்ணீரை மூன்று மூச்சில் குடிப்பார்கள். ஒவ்வொரு முறையும் வாயில் இருந்து பாத்திரத்தை எடுத்து மீண்டும் வாயில் வைப்பார்கள்.

69. பாத்திரத்தின் உள்ளே மூச்சு விடமாட்டார்கள்.

70. ஒவ்வொரு முறை வாய் வைக்கும் போதும் பிஸ்மில்லாஹ் (இறைவனின் பெயரால்) என்று கூறுவார்கள். வாயை விட்டு எடுத்தவுடன் அல்ஹம்துலில்லாஹ் (புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே) என்று கூறுவார்கள். கடைசி முறை வஷ்ஷுக்ரு லில்லாஹி (அல்லாஹ்வுக்கே நன்றி) என்றும் சேர்த்துக் கொள்வார்கள்.



## ஆடை அணிவதில் அண்ணலாரின் நற்பழக்கங்கள்

71. மற்ற ஆடைகளை விட கமீஸ் எனப்படும் கால் வரையுள்ள நீண்ட ஜுப்பாவை நபியவர்கள் மிகவும் விரும்புவார்கள்.

72. சட்டைக் கைகள் மணிக்கட்டு வரை இருக்கும்.

73. சட்டைக் கைகள் மிகவும் இறுக்கமாகவோ மிகவும் விசாலமாகவோ இல்லாமல் நடுத்தரமாக இருக்கும்.

74. நபியவர்கள் பயணங்களில் அணியும் ஆடைகள் உயரம் சற்று குறைவாகவும், கைகள் சற்று சிறியதாகவும் இருக்கும்.

75. நபியவர்களின் சட்டையின் பிளவு நெஞ்சு வரை இருக்கும்.

76. ஒரு சில நேரங்களில் பட்டனை திறந்து வைத்து இருப்பார்கள். நபியவர்களின் புனிதமான நெஞ்சுப் பகுதிகள் வெளியே தெரியும். அதே நிலையில் தொழுதும் இருக்கிறார்கள்.

77. சட்டை அணியும் போது முதலில் வலது கையையும் பின் இடத கையையும் அணிவார்கள்.

78. பெருமானார் பைஜாமா (கால் சட்டை) ஒரு தடவை கூட அணிந்ததில்லை. கைலிதான் கட்டுவார்கள். ஆனால் ஒரு பைஜாமாவை வாங்கிவைத்திருந்தார்கள். அணிய வில்லை பெருமானார் முன்னிலையில் தோழர்கள் பைஜாமா அணிந்து வந்துள்ளார்கள். அதை நபியவர்கள் பார்த்திருக்கிறார்கள்.

79. நபியவர்கள் தொப்புளுக்கு கீழேயே கைலி கட்டுவார்கள்.

அரைக் கெண்டைக் கால் வரை கைலி இருக்கும்.

80. கைலி கட்டியிருக்கும் போது பின் பகுதியை விட முன் பகுதி சற்று தாழ்ந்திருக்கும்.

81. பெருமானாரின் போர்வை நான்கு கெஜ நீளமும், 2 கெஜமும் 1 ஜான் அகலமும் உள்ளதாக இருந்தது.

82. நபியவர்கள் சில நேரங்களில் தாங்கள் அணியும் துண்டு வலது கையின் கீழ் இருக்குமாறும், அதன் இரு முனைகள் இடது கையில் தோள் புறத்தின் மேல் இருக்குமாறும் அணிவார்கள்.

83. நபியவர்கள் புதிய ஆடை அணிந்தால் வெள்ளிக்கிழமை ஜும்ஆவுக்கு அணிவார்கள்.

84. வெண்ணிற ஆடைதான் பெருமானாருக்கு மிகவும் பிரியமாக இருந்தது. வண்ண உடைகளில் பச்சை கலரை மிகவும் விரும்புவார்கள். கருப்பு நிற தலைப்பாகை அணிவார்கள்.

85. சிவப்பு மற்றும் கருஞ்சிவப்பு நிறத்தை வெறுப்பவர்களாக இருந்தார்கள்.

86. பெருமானார் புதிய ஆடை அணியும் போது அந்த ஆடையின் பெயரைச் சொல்லி (இந்த சட்டையை) இதை எனக்கு வழங்கிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று கூறுவார்கள். கீழ் வரும் துஆவை ஓதுவார்கள்.

اَللّٰهُمَّ لَكَ الْحَمْدُ كَمَا كَسَوْتَنِيْهِ اَسْئَلُكَ خَيْرَهُ وَخَيْرَ مَا صُنِعَ لَهُ





## அண்ணலாரின் தலைப்பாகை

87. நபியவர்கள் தலைப்பாகை கட்டுபவர்களாக இருந்தார்கள்.

88. தலைப்பாகை இல்லையெனில் நெற்றியிலே ஒரு துணியைக் கட்டிக் கொள்வார்கள்.

89. தலைப்பாகை கட்டினால் அதில் அவசியம் துணியின் ஒரு முனையைக் குஞ்சமாக தொங்கவிடுவார்கள்.

90. குஞ்சம் ஏறத்தாழ ஒரு முழம் இருக்கும்.

91. குஞ்சம் முதுகு புறத்தில் இரண்டு தோள்களுக்கும் நடுவில் இருக்கும்.

92. தலைப்பாகையைத் தலையில் சுற்றி அதன் கடைசிப் பகுதியை பின்பக்கத்தில் சொருகுவார்கள்.

93. வெயில் கடுமையாக இருந்தால் தலைப்பாகையின் குஞ்சத்தை முகத்தில் போட்டுக் கொள்வார்கள்.

94. தலைப்பாகைக்கு கீழே அவசியம் தொப்பி அணிவார்கள்.





## நபியவர்களின் தொப்பி



95. நபியவர்கள் வெள்ளைத் தொப்பி அணியக் கூடியவர்களாக இருந்தார்கள்.

96. ஊரில் இருக்கும் போது நபியவர்கள் தலையோடு ஒட்டிய தொப்பியை அணிவார்கள்.

97. பிரயாணத்தில் உயரமான தொப்பி அணிவார்கள். சில நேரங்களில் தொழும்போது மறைப்புக்காக அந்தத் தொப்பியை முன்னால் வைத்துக் கொள்வார்கள்.

98. நபியவர்கள் பூ வேலைப்பாடு செய்யப்பட்ட மொத்தமான தொப்பியும் அணிந்துள்ளார்கள்.







# நபியவர்களின் மோதிரம்

99. நபியவர்கள் வெள்ளியிலான மோதிரம் அணிவார்கள்.

100. சில சமயம் வலது கையிலும் அணிந்துள்ளார்கள். சில சமயம் இடது கையிலும் அணிந்துள்ளார்கள்.

101. மோதிரத்தை சுண்டு விரலில் அணிவார்கள்.

102. வெள்ளியால் செய்யப்பட்ட மோதிரமும், சில நேரங்களில் அபிசீனிய நாட்டு கற்கள் பதித்த மோதிரமும் அணிந்துள்ளார்கள்.

103. மோதிரத்தின் கல் கையின் உள் பக்கம் அதாவது உள்ளங்கைப் பக்கம் இருக்கும்படி அணிவார்கள்.

104. பெருமானாரின் மோதிரத்திலே முஹம்மதுர் ரசூலுல்லாஹ் (முஹம்மது இறைவனின் தூதர்) என்று எழுதி இருந்தது. கீழ் வரிசையில் முஹம்மத் என்றும், அதற்கு மேல் ரசூல் என்றும், அதற்கு மேல் அல்லாஹ் என்றும் எழுதியிருந்தது.

105. நபியவர்கள் மலம் ஜலம் தேவைகளை நிறைவேற்றச் செல்லும் போது மோதிரத்தை கழற்றி விட்டுச் செல்வார்கள்.





# அண்ணல் நபியின் காலணிகள்

106. நபியவர்கள் காலணிகளை அணியும் போது முதலில் வலது காலில் அணிவார்கள். பின்பு இடது காலில் அணிவார்கள் கழற்றும் போது முதலில் இடது காலை கழற்றிவிட்டு பின்பு வலது காலை கழற்றுவார்கள்.

107. பூட்ஸ் (ஷூ) அணிந்தால் அணிவதற்கு முன்பு அதை தட்டிக் கொள்வார்கள். ஏதும் பூச்சிகள் இருந்தால் வெளியே வந்துவிடுதற்காக.

108. நபியவர்கள் பூட்ஸ் அணியும் போது சில நேரங்களில் நின்று கொண்டும் அணிவர்கள், சில நேரங்களில் உட்கார்ந்து கொண்டும் அணிவார்கள்.

109. நபியவர்கள் காலணியில் இரண்டு குமிழ்கள் இருக்கும். (பெருவிரல் அதற்கு அடுத்த விரலுக்கு மத்தியில் ஒன்றும், சுண்டு விரல் அதற்கு அடுத்த விரலுக்கு மத்தியில் ஒன்றும் இருக்கும்)

110. நபியவர்கள் தங்கள் காலணிகளை எடுப்பதாக இருந்தால் இடது கையால் எடுப்பார்கள். பெருவிரலுக்கு. பெருவிரலுக்கு அடுத்த விரலைக் கொண்டு எடுப்பார்கள்.

111. நபியவர்களின் பாதணி ஒரு ஜான் இரண்டு அங்குல நீளமுள்ளதாக இருந்தது.







## உத்தம நபிகளார் உறங்கும் ஒழுக்கங்கள்

112. நபிகளார் இரவின் ஆரம்பத்தில் தூங்கிக் கொள்வார்கள். நடு இரவுக்குப் பின் அதாவது பின்னிரவில் தொழுகைக்காக எழுந்துக் கொள்வார்கள்.

113. எப்போதும் வலது புறம் ஒருக்கணித்து படுப்பார்கள். இன்னும் வலது கையின் உள்ளங்கை மீது வலது கன்னத்தை வைத்து படுத்துக் கொள்வார்கள்.

114. யாராவது முகங்குப்புற படுத்திருந்தால் மிகவும் அதிருப்தி அடைவார்கள். தங்களின் புனிதமிகு பாதங்களால் அவருடைய பாதத்தில் தட்டி எழுப்புவார்கள்.

115. நபியவர்கள் சில நேரங்களில் பேரீட்சைமரப் பட்டைகளின் சீவல்கள் நிரப்பப்பட்ட மெத்தைகளில் படுத்திருக்கிறார்கள். இன்னும் சில நேரங்களில் புற்கள் நிரப்பப்பட்ட மெத்தைகளிலும், சில நேரங்களில் ஈச்சமட்டைகளால் பின்னப்பட்ட பாய்களிலும், சில நேரங்களில் தோல்விரிப்புகளிலும், சில நேரங்களில் துணியைக் கீழே விரித்தும், சில நேரங்களில் வெறும் தரையிலும் படுத்திருக்கிறார்கள்.

116. சில நேரங்களில் இரண்டாக மடிக்கப்பட்ட போர்வைகளில் படுப்பார்கள். நான்காக மடிக்க வேண்டாம் என்று கூறுவார்கள்.

117. நபியவர்கள் தூங்கும் போது அவர்களின் மூச்சு சற்று மெல்லிய சப்தத்துடன் வெளியாகும்.

118. நபியவர்கள் சில நேரங்களில் மல்லார்ந்து கால்களை

நீட்டிப் படுப்பார்கள். அப்போது ஆடைகள் விலகாமல் இருக்க ஒரு கால் மீது ஒரு கால் வைத்துக் கொள்வார்கள். அவ்வாறின்றி யாரும் மல்லார்ந்து படுத்தால் ஆடைகள் விலக வாய்ப்பு இருப்பதால் அதை தடை செய்வார்கள்.

119. இஷா (இரவுக் தொழுகை) க்கு முன் நபியவர்கள் எப்போதும் தூங்கியதேயில்லை.

120. கொஞ்சம் கூட விளக்கு வெளிச்சம் இல்லாத கடும் இருளில் நபியவர்கள் தூங்கமாட்டார்கள்.

121. தஹஜ்ஜத் தொழுகைக்கும் பஜ்ர் தொழுகைக்கும் இடையில் சிறிது நேரம் படுத்து ஓய்வு எடுத்துக் கொள்வார்கள்.

122. நபியவர்கள் மிகுதமாக தூங்குவதற்கு முன் ஒழு செய்து கொள்ளும் பழக்கம் இருந்தது.

123. இரவின் நடுவில் மல ஜல தேவைகளுக்குச் சென்றால் மீண்டும் கை முகம் கழுவிக் கொண்டு படுப்பார்கள்.

124. தூங்கும் முன் சட்டையைக் கழற்றி மாட்டிவிட்டு இரவுக்கான கைலியை அணிந்து கொண்டு படுப்பார்கள்.

125.நபியவர்கள் மரத்தாலான ஒரு பாத்திரத்தை வைத்திருந்தார்கள். எப்போதாவது சில நேரங்களில் இரவில் அதில் சிறுநீர் இருந்து கொள்வார்கள்.

126. நபியவர்களின் படுக்கையின் தலைப் பக்கத்தில் கருப்பு நிற சுர்மாக் கூடு இருக்கும். ஒவ்வொரு இரவும் தூங்கும் முன் சுர்மா இட்டுக் கொள்வார்கள்.

127. நபியவர்கள் ஒவ்வொரு கண்ணிலும் மூன்று மூன்று தடவை சுர்மா இடுவார்கள்.

128. தூங்கும் முன் குடும்பத்தினருடன் சற்று நேரம் உரையாடுவார்கள். வீட்டு விஷயங்கள் மற்ற முஸ்லிம்களைப் பற்றி நல்ல விஷயங்கள் பேசுவார்கள்.

129. ஒவ்வொரு இரவிலும் தூங்கும் முன் சூரத்துல் இக்லாஸ்,

சூரத்துல் ஃபலக், சூரத்துன்னாஸ் இம்மூன்றையும் ஓதி கைகளில் ஊதி முகம் மற்றும் தலையில் தேய்த்து பிறகு உடல் முழுவதும் தேய்த்துக் கொள்வார்கள். இவ்வாறு மூன்று முறை செய்வார்கள்.

130. நபியவர்கள் தூக்கத்தை விட்டு விழித்தவுடன்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَحْيَانَا بَعْدَ مَا اَمَاتَنَا وَاِلَيْهِ النُّشُوْرُ

**“எங்களை மரணிக்கச் செய்து மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பிய இறைவனுக்கே எல்லாப் புகழும்”** என்று கூறுவார்கள்.





## நபியவர்கள் நறுமணம் பூசும் முறைகள்

131. நபியவர்களுக்கு நறுமணம் மிகவும் பிரியமாக இருந்தது. குறிப்பாக கஸ்தூரி, ஊது, ரைஹான் போன்ற நறுமணங்கள் மிகவும் விருப்பமாக இருந்தன.

132. நபியவர்கள் இரவின் கடைசி பகுதியில் நறுமணம் பூசிக் கொள்வார்கள்.

133. தூங்கி எழுந்தவுடன் தேவைகளை நிறைவேற்றிய பின் ஒழுச் செய்து ஆடைகளில் நறுமணம் பூசிக் கொள்வார்கள்.

134. நறுமணம் பொருட்களை யாரும் அன்பளிப்புச் செய்தால் மறுக்கமாட்டார்கள். நறுமணப் பொருட்கள், பால், தலையணை இவற்றை யாரும் அன்பளிப்பு செய்தால் மறுக்க கூடாது என்று கூறுவார்கள்.

135. நபியவர்கள் சில நேரங்களில் அத்தரை தலையில் பூசிக் கொள்வார்கள்.





## நபியவர்கள் எண்ணை பூசுதல், தலைமுடி சீவுதல் பற்றிய விளக்கம்



136. நபியவர்கள் தூங்குவதற்கு முன்பும் தூங்கி எழுந்த பின்னும் பல் துலக்கி ஒழுச் செய்து தலைமுடி இன்னும் தாடி முடியைச் சீவிக் கொள்வார்கள்.

137. நபியவர்கள் ஊரில் இருந்தாலும் பயணத்தில் இருந்தாலும் அவர்கள் படுக்கையின் தலைமாட்டில் ஏழு பொருட்கள் எப்போதும் இருக்கும் . 1. எண்ணெய் பாட்டில் 2. சீப்பு 3. சுர்மா கூடு 4. கத்திரிக் கோல் 5. மிஸ்வாக் 6. கண்ணாடி 7. ஒரு சிறு குச்சி. அந்தக் குச்சியைக் கொண்டு முதுகு, தலைப் போன்ற பகுதியில் அரித்தால் தேய்த்துக் கொள்வார்கள்.

138. நபியவர்கள் வைத்திருந்த சீப்பு யானை தந்தத்தால் செய்யப்பட்டிருந்தது.

139.தாடிக்கும், தலைமுடிக்கும் முதலில் எண்ணெய் தடவுவார்கள், பின் சீவுவார்கள்.

140. தாடிக்கு எண்ணெய் தேய்க்கும் போது கழுத்தோடு ஒட்டிய பகுதியில் இருந்து ஆரம்பம் செய்வார்கள்.

141. தலைக்கு எண்ணெய் தேய்க்கும் போது நெற்றியின் பக்கம் இருந்து ஆரம்பம் செய்வார்கள்.

142. நபியவர்கள் வாழ்வில் பெரும்பகுதி தலையில் முடி வைத்திருந்தார்கள். இரண்டு முறைதான் (ஹஜ்ஜுக்கும், உம்ராவுக்கும்) மொட்டை போட்டுள்ளார்கள்.

143. நபியவர்கள் மூன்று முறையில் முடி வைத்திருக்கிறார்கள். 1. காதின் அறைப்பகுதி வரையிலும் 2.

காதின் கீழ் நுனி வரையிலும் 3. தோல் புஜம் வரையிலும்.

144. ஆரம்பத்தில் வாங்கு எடுக்காமல் சீவி வந்தார்கள், பிற்காலத்தில் நடுவாங்கு எடுத்து சீவி வந்தார்கள்.

145. தலையில் அதிகமாக எண்ணெய் தேய்ப்பார்கள். அந்த எண்ணெய் மற்ற ஆடைகளில் ஒட்டாமல் இருப்பதற்காக ஒரு துணியை தலையில் போட்டு அதற்கு மேல் தலைப்பாகை கட்டிக் கொள்வார்கள்.

146. சில நேரங்களில் தாடிக்கு தண்ணீர் தெளித்தும் சீவி இருக்கிறார்கள்.

147. சில நேரங்களில் நபியவர்களுக்கு மனைவிமார்கள் தலைமுடி சீவி விடுவார்கள்.

148. சீவும் போது முதலில் வலது பக்கம் அடுத்து இடது பக்கம் சீவுவார்கள்.

149. கண்ணாடியில் முகம் பார்த்தால் இந்த துஆவை ஓதுவார்கள்.

اَللّٰهُمَّ حَسَّنْتَ خَلْقِيْ فَحَسِّنْ خُلُقِيْ وَاَوْسِعْ عَلَيَّ فِيْ رِزْقِيْ

இறைவா! என் தோற்றத்தை அழகுப்படுத்தினாய் என் குணத்தையும் அழகுபடுத்துவாயாக! என் குணத்தையும் அழகுபடுத்தவாயாக! மேலும் எனது உணவில் விசாலத்தை ஏற்படுத்துவாயாசு'





# நபியவர்கள் நகம் வெட்டும் முறைகள்

150. நபியவர்கள் கை நகம் வெட்டும்போது முதலில் வலது கையின் ஆட்காட்டி விரல் பின்னர் வரிசையாக நடுவிரல் பின்னர் அதற்கு அடுத்த விரல் பிறகு சுண்டு விரல் அதன்பின் இடது கையின் சுண்டு விரல் பின்னர் அதற்கு அடுத்த விரல் பின் நடுவிரல் பின் ஆட்காட்டி விரல் பின் பெருவிரல் கடைசியாக வலது கையின் பெருவிரல் இந்த முறையில் வெட்டுவார்கள்.

151. கால் விரல் நகங்களை வெட்டும் போது முதலில் வலது கால் சுண்டு விரலில் இருந்து ஆரம்பித்து பெருவிரல் வரை முடிப்பார்கள். பிறகு இடது கால் சுண்டு விரலில் இருந்து ஆரம்பித்து பெருவிரல் வரை முடிப்பார்கள்.

152. மிகுதமாக பதினைந்து நாட்களுக்கு ஒரு மறை நகம் வெட்டுவார்கள்.





## பிரயாணத்தில் நபியவர்களின் பழக்க வழக்கங்கள்

153. நபியவர்கள் நீண்ட பிராயணத்திற்கு தாங்கள் புறப்படுவதாக இருந்தாலும், அல்லது யாரையும் அனுப்புவதாக இருந்தாலும் வியாழக்கிழமை புறப்படுவதைத்தான் விரும்புவார்கள்.

154. பயணங்களில் வாகனத்தை விரைவாக செலுத்துவதை விரும்புவார்கள். தொலைதூரப் பயணமாக இருந்தால் இன்னும் விரைவாகச் செல்வார்கள்.

155. பயணங்களின் இடையில் எங்கோயாவது தங்கினால் மீண்டும் பயணத்தை அதிகாலையில் தொடங்குவது வழக்கமாக இருந்தது.

156. பயணத்தில் எங்கேயாவது சிறிது நேரம் தங்கினால் இரண்டு ரகஅத் தொழாமல் அங்கிருந்து செல்லமாட்டார்கள்.

157. பயணத்தில் ஓரிடத்தில் தங்குவதாக இருந்தாலும், பயணம் முடிந்து வீட்டுக்குத் திரும்பினாலும் இரண்டு ரகஅத் தொழுகாத வரை உட்கார மாட்டார்கள்.

158. பயணத்தில் இடையில் தங்கும் இடத்தை முன்னிரவிலேயே அடைந்து விட்டால் வலது புறம் ஒருக்கணித்து படுத்து வலது உள்ளங்கையில் வலது கன்னத்தை வைத்து ஓய்வு எடுப்பார்கள்.

159. இரவின் பிற்பகுதியில் தங்கும் இடத்தை அடைந்தால் வலது கையின் முட்டியை நிலத்தில் ஊன்றி அதன்

உள்ளங்கையில் தன் தலையை வைத்து தூங்குவார்கள். (காலைத் தொழுகைக்கு உஷாராக எழுவதற்காக இவ்வாறு செய்தார்கள்)

160. தங்களின் நண்பர்கள் பயணம் சென்று திரும்பி வந்தால் அவர்களை முஆனகா செய்து (கட்டி அனைத்து) நெற்றியில் முத்தமிடுவார்கள்.

161. யாரையும் வழி அனுப்பினால் தனக்காக துஆ (இறைவனிடம் இறைஞ்சுதல்) செய்யும்படி கேட்டுக் கொள்வார்கள். சகோதரரே! தங்களின் துஆக்களில் என்னை மறக்காதீர்கள் என்று கூறுவார்கள்.

162. பயணத்தில் இருந்து திரும்பும்போது இரவு நேரத்தில் வீட்டுக்குத் திரும்ப மாட்டார்கள். வழியில் ஓரிடத்தில் தங்கி காலையில்தான் வீட்டுக்கு வருவார்கள்.

163. தாங்கள் பயணம் சென்று திரும்பும் நேரத்தை முன்கூட்டியே தன் வீட்டினருக்கு சொல்லி அனுப்பிவிடுவார்கள்.

164. பயணம் சென்று திரும்பினால் நேராக மஸ்ஜிதுக்குச் சென்று இரண்டு ரகஅத் தொழுது விட்டு பின்னர் வீட்டுக்குச் செல்வார்கள்.

165. பயணத்தில் இருந்து திரும்பும்போது ஊருக்குள் நுழைந்ததும் சிறுவர்களைக் கண்டால் தனது வாகனத்தில் தனக்கு முன் உட்கார வைத்துக் கொள்வார்கள். பெரியவர்களை பின்னால் உட்கார வைத்துக் கொள்வார்கள்.

166. பயணத்தில் சமையல் இன்னும் மற்ற வேலைகளில் தோழர்களோடு நபியவர்களும் அவசியம் பங்கெடுத்துக் கொள்வார்கள். ஒரு பயணத்தில் விறகு சேகரிக்கும் பொறுப்பை தாங்கள் எடுத்துக் கொண்டார்கள்.

167. தாங்கள் பயணம் செல்லும் வழியில் ஒவ்வொரு நாளும் தோழர்களில் ஒருவரை தங்கள் வாகனத்தில் உட்கார வைத்துக் கொள்வார்கள்.

168. வாகனத்தில் ஏற கால் வைக்கும் போது பிஸ்மில்லாஹ் என்று சொல்வார்கள். ஏறி அமர்ந்தவுடன் அல்லாஹ் அக்பர் என்று சொல்வார்கள். பின்னர் கீழ்வரும் துஆவை ஓதுவார்கள்

سُبْحَانَ الَّذِيْ سَخَّرَ لَنَا هٰذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِيْنَ وَاِنَّا اِلٰى رَبِّنَا لَمُنْقَلِبُوْنَ ، اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ مِنْ سَفَرِنَا هٰذَا الْبِرَّ وَالتَّقْوٰى وَمِنَ الْعَمَلِ مَا تُحِبُّ وَتَرْضٰى ، اَللّٰهُمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هٰذَا وَاطْوِ عَنَّا بُعْدَ الْاَرْضِ ، اَللّٰهُمَّ اَنْتَ الصَّاحِبُ فِى السَّفَرِ وَالْخَلِيْفَةُ فِي الْاَهْلِ وَالْمَالِ.

169. பயணத்தில் இருந்து திரும்பியதும் மேற்கூறிய துஆவையும் ஓதுவார்கள். அத்துடன் இதையும் ஓதுவார்கள்.

آئِبُوْنَ تَائِبُوْنَ عَابِدُوْنَ لِرَبِّنَا حَامِدُوْنَ

170. வாகனம் மேட்டில் ஏறும்போது அல்லாஹு அக்பர் என்று கூறி இதையும் கூறுவார்கள்.

171. வாகனம் பள்ளத்தில் இறங்கும்போது சுப்ஹானல்லாஹ் என்று சொல்வார்கள்.

172. பயணத்தில் இரவு ஆகி விட்டால் இந்த துஆவை ஓதுவார்கள்.

يَا اَرْضُ رَبِّيْ وَرَبُّكَ اللّٰهُ اَعُوْذُ بِاللّٰهِ مِنْ شَرِّكِ وَشَرِّ مَا خُلِقَ فِيْكِ وَشَرِّ مَا يَدُبُّ عَلَيْكِ وَاَعُوْذُ بِاللّٰهِ مِنْ اَسَدٍ وَاَسْوَدٍ وَمِنَ الْحَيَّةِ وَالْعَقْرَبِ وَمِنْ سَاكِنِ الْبَلَدِ وَمِنْ وَالِدٍ وَمَا وَلَدَ.

173. தாங்கள் தங்கும் ஊரை தூரத்திலிருந்து பார்த்தவுடன் என்று மூன்று முறை கூறுவார்கள் அந்த ஊரில் நுழையும் போது

இப்படி ஓதுவார்கள்.

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْهَا اَللّٰهُمَّ ارْزُقْنَا جَنَاهَا وَحَبِّبْنَا اِلٰى اَهْلِهَا

وَحَبِّبْ صَالِحَ اَهْلِهَا اِلَيْنَا

174. யாரையும் வழி அனுப்பினால் இப்படி துஆச் செய்வார்கள்

اَسْتَوْدِعُ اللهَ دِيْنَكَ وَاَمَانَتَكَ وَخَوَاتِيْمَ عَمَلِكَ

175. பயணத்திலிருந்து திரும்பி வீட்டை சந்தித்தவுடன் இந்த துஆவை ஓதுவார்கள்

تَوْبًا تَوْبًا لِرَبِّنَا اَوْبًا لَا يُغَادِرُ عَلَيْنَا حَوْبًا





## பெருமானார் (ஸல்) அவர்கள் கழிவறை செல்லும் விஷயத்தில் அவர்களின் பழக்கவழக்கங்கள்

176. நபி (ஸல்) அவர்கள் கழிவறை சென்றால் இடது காலை முதலில் வைத்து நுழைவார்கள் வெளியில் வரும் போது வலது காலை முதலில் வைத்து வெளியேறுவார்கள்.

177. தேவையை நிறைவேற்ற காட்டுப் பக்கம் சென்றால், பிறர் பார்வையை விட்டும் மறையும்படி வெகு தூரம் செல்வார்கள். சில சமயங்களில் ஊரை விட்டு இரண்டு மைல் தூரம் வரை சென்று விடுவார்கள்.

178. சிறுநீர் கழிப்பதாக இருந்தால் மிருதுவான மண் பகுதியைத் தேடிச் சென்று அமர்வார்கள். (தரை கெட்டியாக இருந்தால் சிறுநீர் துளிகள் கால்களில் தெறிக்க வாய்ப்பு ஏடிற்படும்)

179. மிருதுவான மண் பகுதி இல்லையென்றால் ஒரு குச்சியால் மண்ணை கிளறி பின்பு அமர்வார்கள்.

180. தேவைகளுக்காகச் செல்லும்போது காலணிகளை அணிந்து கொண்டு மோதிரங்களை கழற்றி வைத்து விட்டு தலையை மறைத்துக் கொண்டு செல்வார்கள்.

181. சிறுநீருக்காக அமரும்போது இரு கால்களுக்கிடையில் போதிய இடைவெளி விட்டு குத்த வைத்து அமருவார்கள்.

182. அமரும்போது பூமியுடன் மிக நெருக்கமாக ஆகும் வரை ஆடைகளை விலக்கமாட்டார்கள்.

183. மணல் குன்றுகள் அல்லது கல் குவியல்கள் அல்லது மரங்கள் இலைகளின் மறைவில்தான் அமருவார்கள்.

184. நபியவர்கள் கிப்லாவை முன்னோக்கி அல்லது பின்னோக்கி அமர்ந்து சிறுநீர் கழிக்கமாட்டார்கள்.

185. தேவைகளை நிறைவேற்றியபின் சுத்தம் செய்வதற்காக மண்கட்டிகளையும், தண்ணீரையும் கொண்டு செல்வார்கள் மண் கட்டிகள் (மூன்று, ஐந்து போன்று) ஒற்றை எண்ணிக்கையில் இருக்கும்.

186. தேவை நிறைவேற்றி வந்தபின் இடது கையை மண்ணில் நன்றாக தேய்த்துக் கழுவுவார்கள்.

187. கழிவறையில் நுழையும் முன்

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ

என்ற துஆவை ஓதுவார்கள்.

188. கழிவறையிலிருந்து வந்தவுடன்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَذْهَبَ عَنِّيَ الْاَذٰى وَعَافَانِيْ

என்ற துஆவை ஓதுவார்கள்.





## தும்மல் வரும் போது நபியவர்களின் நடைமுறைகள்

189. நபியவர்கள் தும்மினால் மிகவும் சிறிய குரலில் தும்முவார்கள்.

190. தும்மினால் வாயை ஒரு துணியைக் கொண்டு அல்லது கையைக் கொண்டு மறைத்துக் கொள்வார்கள்.

191. நபியவர்கள் தும்மியவுடன் அல்ஹம்துலில்லாஹ் என்று சொல்வார்கள்.

192. பிறர் தும்மினால் தும்மியவர் '**அல்ஹம்துலில்லாஹ்**' என்று சொன்னால் '**யர்ஹகுமுல்லாஹ்**' என்று பதில் கூறுவார்கள்.

193. ஒருவர் அடிக்கடி தும்மினால் இரண்டு முறை பதில் கூறுவார்கள். அதற்கு பின் மூன்றாவது முறை தும்மினால் அன்பருக்கு ஜலதோஷம் பிடித்திருக்கிறது என்று கூறிவிட்டு அமைதியாக இருந்து விடுவார்கள்.

194. நபியவர்களின் தும்மலுக்கு யாரும் யர்ஹகுமுல்லாஹ் என்று பதில் கூறினால் يَهْدِيْكُمُ اللهُ وَيُصْلِحُ بَالَكُمْ என்று துஆச் செய்வார்கள்.

195. யாரும் தும்மியவுடன் அல்ஹம்துலில்லாஹ் கூறாவிட்டால் நபியவர்கள் பதில் கூறமாட்டார்கள். இதைப் பற்றி கேட்கப்பட்டால் அவர் அல்லாஹ்வை மறந்துவிட்டார். நாமும் அவரை மறந்துவிட்டோம் என்று கூறுவார்கள்.

196. மாற்று மதத்தவர் தும்மினால் யஹ்தீகுமுல்லாஹ் என்று கூறுவார்கள்.



## நபியவர்கள் நடந்து செல்லும் ஒழுக்கங்கள்

197. நபியவர்கள் நடக்கும்போது முன்னால் சற்று குனிந்த வண்ணம் நடப்பார்கள். அதாவது மேட்டிலிருச்து பள்ளத்தில் இறங்குவரைப் போல நடப்பார்கள்.

198. கால்களை தரையில் இழுக்காமல் கால்களை எடுத்து எடுத்து வைத்து நடப்பார்கள். இன்னும் அடிகளை தூரம் தூரமாக வைப்பாகள்.

199. நபியவர்கள் நடந்தால் வேகம் வேகமாக நடப்பார்கள். அதாவது சாதாரணமாக நடப்பவர்கள் பின் தங்கிவிடும் அளவிற்கு நடப்பார்கள்.

200. தோழர்களோடு நடக்கும்போது எல்லோரையும் முன்னால் நடக்கச் செய்து, தாங்கள் பின்னால் நடப்பார்கள். எனக்கு பின்னால் மலக்குகள் நடந்து வர விடுங்கள் என்று கூறுவார்கள்.

201. நடக்கும்போது உடலை தளர்வாக வைத்து நடக்கமாட்டார்கள். மாறாக விரைப்பாகவும், சுறுசுறுப்பாகவும் நடப்பார்கள்.

202. நடக்கும்போது வலது பக்கமும், இடது பக்கமும், அங்கும், இங்கும் திரும்பிப் பார்க்கமாட்டார்கள்.

203. தாங்கள் நடக்கும்போது எதையேனும் திரும்பிப் பார்ப்பதாக இருந்தால் முழு உடலைக் கொண்டு திரும்புவார்கள். வெறும் கழுத்தை மட்டுமோ, பார்வையை மட்டுமோ திருப்பமாட்டார்கள்.

204. நடக்கும்போது சில நேரங்களில் தங்கள் தோழர்களின் கைகளை பிடித்துக் கொண்டு நடப்பார்கள்.

205. நடக்கும்போது தங்கள் கைலியின் பின்பக்கத்தை வழக்கத்தை விட சற்று உயர்த்திக் கட்டிக் கொள்வார்கள்.







206. நபி (ஸல்) அவர்கள் பேசும்போது ஒவ்வொரு வார்த்தையையும், நிறுத்தி நிறுத்தி பேசுவார்கள். கேட்பவர்கள் மிக எளிதாக அதை மனனம் செய்து கொள்ள முடியும். யாரும் நபியின் வார்த்தைகளை எண்ணி விட விரும்பினால் எண்ணி விடும் அளவுக்கு நிதானமாகப் பேசுவார்கள்.

207. நபியவர்கள் தங்கள் தோழர்கள் மனனம் செய்து கொள்ள வசதியாக முக்கிய விஷயங்களை மூன்று தடவை கூறுவார்கள்.

208. சபைகளில் தெளிவாக சொல்ல முடியாத விஷயங்களை சூசகமாக மறைமுகமாக சொல்வார்கள்.

209. சில விஷயங்களை மிகவும் வலியுறுத்திக் கூறுவதாக இருந்தால் சாய்ந்து உட்கார்ந்து இருந்தாலும் நிமிர்ந்து உட்கார்ந்து கொள்வார்கள்.

210. உரையோடும்போது மலர்ந்த முகத்துடனும் எழில்மிகு புன்னகையுடனும் உரையாடுவார்கள்.

211. நபியவர்கள் மக்களை எச்சரிக்கும்படியான விஷயங்களை பேசும் போது சில நேரங்களில் கையை தரையில் தட்டுவார்கள்.

212. நபியவர்கள் பேசும் போது எதையாவது சுட்டிக்காட்ட விரும்பினால் முழுகையைக் கொண்டு சுட்டிக்காடடுவார்கள். விரலைக் கொண்டு சுட்டிக்காட்ட மாட்டார்கள்.

213. பேச்சுக்கு இடையில் ஆச்சரியமான செய்திகள் வரும் போது கையை புரட்டுவார்கள். சில நேரங்களில் வலது

உள்ளங்கையைக் கொண்டு இடது உள்ளங்கையின் பெருவிரல் பகுதியை தட்டுவார்கள். சில நேரங்களில் ஆச்சரியத்தின் போது கையை தொடையில் தட்டுவார்கள். சில நேரங்களில் தலையை மெதுவாக அசைப்பார்கள். இன்னும் சில நேரங்களில் உதடுகளை தனது புனிதமிகு பற்களால் கடிப்பார்கள்.

214. தங்கள் கைகளையும், விரல்களையும் பயன்படுத்தியும் விஷயங்களை விளக்குவார்கள். உதாரணமாக இருவர் ஒன்றாக இருப்பதை குறிக்கும் போது இரண்டு விரல்களையும் சேர்த்து காண்பிப்பார்கள். உறுதியைக் காட்டும்போது இரண்டு கைவிரல்களையும் கோர்த்துக் காண்பிப்பார்கள்.

215. ஆழ்ந்த சிந்தனையின்போது குச்சியால் நிலத்தை சில நேரங்களில் கீருவார்கள்.





## மாநபி (ஸல்) அவர்கள் மக்களுக்கு உரை நிகழ்த்திய முறைகள்

216. நபியவர்கள் உரை நிகழ்த்தும்போது தனது ஊன்று கோலில் சாய்ந்து கொள்வார்கள்.

217. போர்களத்தில் உரையாற்றும்போது ஈட்டியை ஊன்றி நின்று கொள்வார்கள்.

218. உபதேசம் செய்யும்போது வலது பக்கமும், இடது பக்கமும் முழு உடம்புடன் திரும்புவார்கள். உதாரணம் காட்டும் போது கையை அசைப்பார்கள்.

219. மிம்பர் மேடையின் மீது நின்று கொண்டு உரையாற்றுவார்கள். சில நேரங்களில் வாகனத்தில் நின்று கொண்ட உரையாற்றுவார்கள். சில நேரங்களில் வாகனத்தில் அமர்ந்து உரையாற்றுவார்கள்.

220. மிகுதமாக ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் சுருக்கமான அறிவுரைகள் கூறுவார்கள். ஆயினும் சுப்ஹூத் தொழுகைக்குப்பின் நீண்ட நேரம் அமர்ந்து அறிவுரை வழங்குவார்கள்.

221. பொதுமக்களின் பிரயோஜனத்திற்காக சில நேரங்களில் எல்லோரையும் ஒன்று திரட்டி அறிவுரை வழங்குவார்கள்.

222. சொற்பொழிவின் இடையில் ஒரு விஷயத்தை வலியுறுத்த விரும்பினால் என் உயிர் யார் கைவசம் இருக்கின்றதோ அந்த இறைவன் மீது சத்தியமாக என்று சத்தியமிட்டுக் கூறுவார்கள்.

223. மக்கள் சடையாமல் இருப்பதற்காக சில நாட்கள் இடைவெளி விட்டு உபதேச சபைகளை கூட்டுவார்கள்.

224. சில நேரங்களில் இந்த வாரத்தில் இன்ன கிழமை என்று முன்பே அறிவித்து அந்த நாளில் உபதேசம் செய்வதும் உண்டு.






225. பணிவே உருவான நபியவர்கள் சபையில் தனக்கென தனி இடம், தனி மரியாதை வேண்டுமென விரும்பமாட்டர்கள்.

226. தங்கள் வருகைக்காக பிறர் எழுந்து நிற்பதையும் தடுத்துவிடுவார்கள். வேறு யாரும் தலைவர்கள் அல்லது கண்ணியமிக்கவர்கள் வந்தால் எழுந்து சென்று வரவேற்பார்கள். மற்ற தோழர்களையும் எழுந்து நிற்கச் சொல்வார்கள். சில நேரங்களில் தங்களின் புனிதமிகு மேலாடையை கீழே விரித்து வந்தவர்களை அமரச் செய்வார்கள்.

227. நபியவர்கள் சபைகளில் பிறரின் பேச்சுகளை இடைமறித்து பேசமாட்டார்கள். குறிக்கிடமாட்டார்கள். அவர்கள் பேசி முடித்தபின் கடைசியாக தங்களின் கருத்துகளை வெளியிடுவார்கள்.

228. ஏதாவது சபைகளுக்கு நபியவர்கள் வருகை தரும்போது கடைசியில் எங்கே இடம் இருக்கிறதோ அங்கே உட்கார்ந்து கொள்வார்கள். எல்லோரையும் தாண்டிச் சென்று

நடுவில் உட்காரமாட்டார்கள்.

229. தங்கள் தோழர்களோடு இருந்து விட்டு ஏதாவது தேவைக்காக வீட்டுக்குச் சென்று திரும்ப விரும்பினால் காலணிகளை அங்கேயே விட்டுச் செல்வார்கள். திரும்பி வரும் எண்ணம் இல்லை என்றால் காலணிகளை அணிந்து செல்வார்கள்.

230. தோழர்கள் எது சம்பந்தமாக உரையாடுகிறார்களோ தாங்களும் அது சம்பந்தமாகவே பேசி அதிலேயே நல்ல அறிவுரைகள் கூறுவார்கள்.

231. தோழர்களோடு அமரும் போது காலை மடித்து மரியாதையாக அமர்வார்கள். சில நேரங்களில் இரு கால்களையும் நட்டு வைத்து, இரண்டு முட்டுகளையும் கையால் வளையமிட்டு அல்லது ஒரு துணியைக் கொண்டு இடுப்பையும், முட்டுகளையும் வளையமிட்டு அமருவார்கள்.

232. நீண்ட நேரம் அமருவதாக இருந்தால் சம்மணமிட்டு அமருவார்கள்.

233. நெருங்கிய நண்பர்களுக்கு மத்தியில் சில நேரங்களில் தலையணையில் சாய்ந்து கொண்டும் அமர்ந்து கொள்வார்கள்.

234. சபைகளில் ஸஹாபாக்களோடு தீனுடைய விஷயங்களை நீண்ட நேரம் பேசிக் கொண்டிருக்கும் போது மக்களுக்கு சற்று சடைவு ஏற்படுவதைப் போன்று தெரிந்தால் உடனே பேச்சை மாற்றி உலக சம்பந்தமான உற்சாகமான விஷயங்களை பேசுவார்கள். மக்களிடம் புத்துணர்ச்சி வந்தவுடன் மீண்டும் தீனுடைய விஷயத்தை பேசுவார்கள்.

235. நபியவர்கள் அமர்ந்திருக்க அடுத்தவர் நின்று கொண்டு உரையாடுவதை விரும்பமாட்டார்கள்.

236. நபியவர்கள் ஒரு விஷயத்தைப் பற்றி பேசிக் கொண்டிருக்கும் போது இடையில் யாரேனும் கேள்வி கேட்டால் அதை கவனிக்காதது போல் தாங்கள் சொல்ல வந்ததை

தொடர்ந்து சொல்லி முடித்து விடுவார்கள். அதன்பின் கேள்வி கேட்டவருக்கு பதில் சொல்லுவார்கள்.

237. சபைகளில் நபியவர்கள் நடுவில் அமர்வார்கள் அவர்களுக்கு முன் ஸஹாபாக்கள் சுற்றி உட்கார்ந்து கொள்வார்கள். பேசும் போது எல்லோருக்கும் முகம் தெரியும் படி அங்கும் இங்கும் திரும்பி உரையாடுவார்கள்.

238. சபைகளை விட்டு எழுந்திருக்கும் போது

سُبْحَانَكَ اَللّٰهُمَّ وَبِحَمْدِكَ اَشْهَدُ اَنْ لَّا اِلٰهَ اِلَّا اَنْتَ اَسْتَغْفِرُكَ وَاَتُوْبُ اِلَيْكَ

இந்த துஆவை ஓதுவார்கள்.





# மன்னர் நபி (ஸல்) அவர்கள் மக்களோடு பழகிய முறைகள்

239. நபியவர்களிடத்தில் யாரேனும் காதோடு காதாக ரகசியம் பேசினால் பேசி முடிந்து அவர்களாக நகரும் வரையிலும் நபியவர்கள் தங்கள் முகத்தை திருப்பிக் கொள்ளமாட்டார்கள்.

240. நபியவர்களின் திருக்கரங்களை பிடித்து யாரும் முஸாபஹா செய்தால் (கை குலுக்கினால்) அவர்களாக கையை விடும் வரையிலும் தங்கள் கையை நபியவர்கள் எடுக்க மாட்டார்கள்.

241. நபியவர்களைப் பார்த்து யாரம் பேசும்போது அவரை விட்டும் முகத்தை திருப்பவே மாட்டார்கள். அவர் முடித்துவிட்டு தன் முகத்தை திருப்பினால் தான் நபியவர்கள் வேறு பக்கம் தன் முகத்தை திருப்புவார்கள்.

242. எவரேனும் புத்தாடை அணிந்து பூமான் நபி சமூகத்தில் வந்தால்

حَسَنَةٌ حَسَنَةٌ - اَبْلِيْ وَاَخْلِقْ وَ يُخْلِفُ اللهُ لَكَ

(ஆஹா என்ன அழகு) இந்த ஆடை பழையதாகும் வரை தங்களுக்கு பயன்படட்டும். மேலும் புத்தாடைகள் அல்லாஹ் உங்களுக்கு தரட்டும்! என்று கூறி வாழ்த்துவார்கள்.

243. தங்களின் நண்பர்களின் பெயர்களை சில நேரங்களில் பாசத்தோடு சுருக்கி அழைப்பார்கள். உதாரணமாக அபா

ஹுரைரா என்பதை அபாஹுர் என்பார்கள்.

244. யாராவது விரும்பதகாத சொற்களையோ, செயல்களையோ வெளிப்படுத்தியதை அறிந்தால் நபியவர்கள் அவரின் பெயரை குறிப்பிடாமல் உங்களில் சிலர் இவ்வாறு செய்வதாக அறிந்தோம். அவை நற்பழக்கங்கள் அல்ல என்று கூறுவார்கள்.

245. எவரேனும் இறைவனுக்கு பிடிக்காத செயல்கள் செய்வதாக அறிந்து அவரை கண்டிக்க விரும்பினால் அவரைக் காணும் போது முகத்தை திருப்பிக் கொள்வார்கள். அவர் ஸலாம் சொன்னாலும் வாயால் பதில் கூறாமல், மௌனமாக இருப்பார்கள். நபியவர்களின் வருத்தத்தின் காரணத்தை அறிந்து அவர் திருத்திக் கொண்டால் மறுபடியும் மகிழ்வுடன் பேசுவார்கள்.

246. நபியவர்கள் தெருவில் யாரை சந்தித்தாலும் தாங்கள் முதலில் ஸலாம் சொல்ல முந்திக் கொள்வார்கள்.

247. யாருக்கும் தூது அனுப்பினால் அவசியம் ஸலாம் சொல்லி அனுப்புவார்கள்.

248. எவரேனும் நபியவர்களுக்கு ஸலாம் சொல்லி அனுப்பினால், வந்தவருக்கும், சொல்லி அனுப்பியவருக்கும் சேர்த்து عَلَيْكَ وَعَلَيْهِ السَّلَامُ என்று பதில் ஸலாம் சொல்லுவார்கள்.

249. பெயர் தெரியாத ஒருவரை அழைக்க விரும்பினால்,

يَا ابْنَ عَبْدِ اللهِ

"இறையடியாரின் புதல்வரே" என்று அழைப்பார்கள்.

250. எவரேனும் தேவையுடையவர் நபியிடம் வந்து பேசிக் கொண்டிருந்தால் அவர் எழுந்துச் செல்லும் வரை தாங்கள் எழுந்து செல்லமாட்டார்கள்.

251. யாருடைய பேச்சையும் நடுவில் நிறுத்தமாட்டார்கள். ஆனால், உண்மைக்கு மாற்றமாக பேசினால் உடன்

தடுப்பார்கள். அல்லது எழுந்து சென்று விடுவார்கள்.

252. நண்பர்கள் அன்பளிப்பு கொடுத்தால் மறுக்காமல் ஏற்றுக் கொள்வார்கள். அவருக்கு அதை விட சிறந்த வேறு அன்பளிப்புகள் வழங்குவார்கள்.

253. நண்பர்களை சந்திக்கும் போது ஸலாம் கூறி, கை (முஸாபஹா) கொடுப்பார்கள். சில நேரங்களில் (முஆனகா) கட்டி அணைத்துக் கொள்வார்கள். சில நேரங்களில் நெற்றியில் முத்தமிடுவார்கள்.

254. விருந்தாளிகளுக்கு தாங்களே முன் நின்று விருந்து உபசரிப்பார்கள்.

255. உணவுப் பண்டங்ளை தான் மட்டும் தனியாக உண்ணமாட்டார்கள். தன்னுடன் இருப்பவர்களோடு பகிர்ந்து உண்ணுவார்கள். அங்கே இல்லாதவர்களுக்காக எடுத்து வைத்திருந்து வந்தவுடன் கொடுப்பார்கள்.

256. இரவு நேரத்தில் எங்கும் சென்றால் தூங்குபவர்களுக்கு இடையூறு இல்லாத முறையில் விழித்திருப்போருக்கு மட்டும் கேட்கும் வகையில் குரலைத் தாழ்த்தி ஸலாம் சொல்லுவார்கள்.

257. நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களில் யாரும் தவறு செய்தவர்களை மன்னித்துவிட்டால், அதற்கு அடையாளமாக தங்கள் தலைப்பாகை போன்ற வஸ்துக்களை கொடுத்து அனுப்புவார்கள்.

258. சில நேரங்களில் சில அடையாளங்களை வைத்தும் அடுத்தவர்களை கூப்பிடுவார்கள். ஒரு முறை செருப்பு அணிந்து கொண்டு கப்ருகள் மீது நடந்து சென்றவரை செருப்பு அணிந்தவரே அதை கழற்றி விடுங்கள் என்றும் சொன்னார்கள்.

259. தங்கள் கைகளால் யாருக்கும் ஏதேனும் சிரமம் ஏற்பட்டிருந்தால் அவரிடம் தன்னை பழிவாங்கிக் கொள்ளும் படி கேட்டுக் கொள்வார்கள். இன்னும் ஏதாவது வஸ்துவை அவர்களுக்கு அன்பளிப்பாகத் தருவார்கள்.



## வீட்டில் நுழைவதில் வேந்தர் நபியின் ஒழுக்க முறைகள்

260. நபியவர்கள் தங்கள் வீட்டிலோ பிறர் வீட்டிலோ நுழைவதாக இருந்தால் ஸலாம் கூறியே நுழைவார்கள்.

261. பிறரை சந்திப்பதற்காகச் சென்றால் அவர் வீட்டிற்கு வெளியில் இருந்தே ஸலாம் கூறுவார்கள். வீட்டுக்காரர் பதில் கூறி அழைத்தால் மட்டுமே உள்ளே செல்வார்கள்.

262. அனுமதி கேட்கும்போது வீட்டு வாசலுக்கு நேர் எதிரில் நிற்க மாட்டாகள். மாறாக வலது பக்கத்திலோ அல்லது இடது பக்கத்திலோ ஒதுங்கி நின்று ஸலாம் கூறி அனுமதி கேட்பார்கள்.

263. ஸலாம் கூறிய பின்னும் பதில் வரவில்லை என்றால் சற்று நேரம் கழித்து மீண்டும் ஸலாம் கூறுவார்கள். அதற்கும் பதில் இல்லையென்றால் திரும்பிச் சென்றுவிடுவார்கள்.

264. நபியவர்கள் வீட்டிற்கு யாரும் வந்து உள்ளே வரலாமா? என்று கேட்டால், பணியாளரிடம் அவருக்கு நுழையும் முறையைக் கற்றுக் கொடுங்கள் என்று சொல்வார்கள். அதாவது முதலில் ஸலாம் சொல்லிவிட்டுப் பிறகு அனுமதி கேளுங்கள் என்பார்கள்.

265. ஸலாம் சொல்லாமல் யாரும் உள்ளே வந்துவிட்டால் மீண்டும் வெளியே சென்று ஸலாம் கூறிவிட்டு உள்ளே நுழையும் படி கேட்டுக் கொள்வார்கள்.

266. நபியவர்களை சந்திக்க வருபவர் அனுமதி கேட்கும் போது நபியவர்கள் உள்ளிருந்து யார்? என்று கேட்பார்கள். வந்தவர் நான்தான் என்று சொன்னால் நபியவர்கள் அதிருப்தி

அடைவார்கள். அதாவது ‘‘**நான், நான்**’’ என்றால் என்ன விளங்கும்? பெயரைக் கூறினால் என்ன? என்று கேட்பார்கள்.

267. யாரையும் அழைத்து வர பணியாளரை அனுப்பி வைத்தால், பணியாளருடன் அவரும் அனுமதி வாங்காமல் உள்ளே வந்துவிட்டால் அதைத் தவறாகக் கருதமாட்டார்கள்.





# நபியவர்கள் வியாதி விசாரிக்கும் முறைகள்

268. நோயாளியைப் பார்க்கச் சென்றால் அவருக்கு அருகில் அமர்ந்து ஆறுதல் சொல்வார்கள்.

269. அன்புடன் அவரது கையைப் பற்றிப் பிடித்துக் கொள்வார்கள்.

270. அவருடைய நெற்றியில் அல்லது வலி ஏற்பட்டுள்ள இடத்தில் கையை வைத்து துஆச் செய்வார்கள்.

271. நோயாளியின் தலைப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு தற்சமயம் உடல்நலம் எவ்வாறு இருக்கிறது என்று விசாரிப்பார்கள்.

272. அவருடைய உணவைப் பற்றியும், அவர் தற்போது விரும்புகிற வஸ்த்துவைப் பற்றியும் கேட்பார்கள். உடனே அதை வரவழைத்துக் கொடுப்பார்கள். நோயாளி எதையும் கேட்டால் அதைக் கொடுங்கள் என்று கூறுவார்கள்.





## குழந்தைகளுடன் கோமான் நபிகள்

273. நபியவர்கள் குழந்தைகளை மிகவும் விரும்புவார்கள். குழந்தைகளை முத்தமிடுவார்கள். இன்னும் நல்ல துஆக் களைச் செய்வார்கள்.

274. குழந்தைகள் அருகில் வந்தால் தங்கள் மடியில் உட்கார வைத்து விளையாட்டுக் காட்டுவார்கள்.

275. சில நேரங்களில் தங்கள் புனிதமிகு நாவை வெளியே நீட்டி விளையாட்டுக் காட்டி குழந்தைகளுக்கு மகிழ்வுட்டுவார்கள்.

276. படுத்திருக்கும்போது குழந்தைகள் வந்தால் நெஞ்சிலே உட்கார வைத்து கொள்வார்கள். பாதங்களுடைய உள்பக்கம் உட்கார வைத்து விளையாட்டுக் காட்டுவார்கள்.

277. சில நேரங்களில் பிள்ளைகளை வரிசையாக நிற்க வைத்து சற்று தூரத்தில் அமர்ந்து கொள்வார்கள். என்னை முதலில் தொடுபவருக்கு இந்தப் பொருளைத் தருவேன் என்று கூறுவார்கள். பிள்ளைகள் ஓடி வந்து பெருமானாரின் மீது விழுந்து மூடிக் கொள்வார்கள்.

278. சில நேரங்களில் குழந்தைகளை மகிழ்விப்பதற்காக வேறு பெயர்களைச் சொல்லி அழைப்பார்கள் அனஸ் (ரலி) அவர்களை

يَا ذَا الْاُذُنَيْنِ

**“இரண்டு காதுகள் உடையவரே!”** என்று அழைத்தார்கள்.

279. அபூஉமைர் என்ற சிறுவர் குருவி வளர்த்து வந்தார்

அவரைப் பார்க்கும் போதெல்லாம் அவரிடம் குருவியைப் பற்றியே பேசுவார்கள்.

280. அப்துல்லாஹ் இப்னு பசீர் எனும் சிறுவர் அவர் தாயார் ரசூலுல்லாஹ்வுக்கு கொடுத்து அனுப்பிய திராட்சை பழங்களை வழியில் தானே சாப்பிட்டுவிட்டார். இது நபியவர்களுக்கு தெரிந்த பின்னால் அவரை எப்போது கண்டாலும், அன்புடன் அவரின் காதைப் பிடித்துக் கொண்டு '**மோசடிக்கார சிறுவரே!**' என்று கூறுவார்கள்.





# பொது விஷயங்களில் நபியவர்களின் பழக்க வழக்கங்கள்



281. நபியவர்கள் சாய்ந்து உட்காருவதாக இருந்தால் பெரும்பாலும் இடது பக்கம் சாய்ந்து உட்காருவார்கள்.

282. நபியவர்கள் **ஹா – ஹா** என்று சப்தமிட்டு வெடிச் சிரிப்பாக ஒரு போதும் சிரித்தில்லை பெரும்பபாலும் புன்சிரிப்பே சிரிப்பார்கள். ஓரிரு முறைகள் முன் பற்கள் தெரியும்படி சிரித்திருக்கிறார்கள்.

283. நபி (ஸல்) அவர்கள் சிரிப்பதைப் போலவே அழும் போதும் ஓசையின்றி அழுவார்கள். கண்களில் இருந்து கண்ணீர் கொட்டும். மூச்சுகளை இழுத்து விடுவார்கள். அழும் போது சில நேரங்களில் தண்ணீர் கொதிப்பதைப் போன்று அல்லது திருகைக் கல் அரைப்பது போன்று மெல்லிய ஓசை அவர்கள் நெஞ்சிலிருந்து வெளிப்படும்.

284. நபியவர்கள் கவலையோடு இருக்கும் நேரத்திலே அடிக்கடி தங்கள் திருக்கரங்களை தலையிலும், தாடியிலும் தேய்த்துக் கொள்வார்கள். விரல்களால் ரோமங்களைக் கோதி விடுவார்கள்.

285. நபியவர்கள் மகிழ்ச்சிமிகும் நேரத்திலே பார்வையை கீழே தாழ்த்துவார்கள்.

286. வீட்டில் இருக்கும் போது வீணாக நேரத்தை கழிக்காமல், வீட்டு வேலைகளில் பங்கெடுத்து கொள்வார்கள். மாவு பிசைவது போன்ற சமையல் வேலைகளும் செய்வார்கள். தங்கள் துணிமணிகள், காலணிகள் கிழிந்து இருந்தால் தாங்களே

தைத்து கொள்வார்கள். சில நேரங்களில் பால் கரப்பார்கள்.

287. கடைத் தெருவிற்குச் சென்றுவிட்டுச் சாமான்களை வாங்கி வருவதற்கு ஒரு போதும் வெட்கப்படமாட்டார்கள். தாங்களே பொருட்களை வாங்கி சுமந்து வருவார்கள்.

288. பருவத்தின் முதல் மழை பெய்தால், மேலாடைகளை கழற்றிவிட்டு மழையில் நினைவார்கள்.

289. பிறருக்கு கடிதம் எழுதும் போது எழுதுபவரிடம் ஒவ்வொரு வார்த்தையாகச் சொல்லி எழுதச் சொல்வார்கள். முதலில் பிஸ்மில்லாஹ்வும், அடுத்தது அனுப்புபவர் பெயரும், அடுத்தது பெறுபவர் பெயரும் அதற்குப் பின் விஷயங்களும் எழுதச் சொல்வார்கள்.

290. அசுத்தங்களை சுத்தம் செய்வது, மூக்கு சிந்துவது, செருப்பை எடுத்து வருவது இவ்வாறான காரியங்களை இடது கையால் செய்வார்கள். மற்ற படி அனைத்து காரியங்களும் வலது கையையும், வலது பக்கத்தையும் முற்படுத்துவார்கள்.

291. பஜ்ருத் தொழுகைக்குப் பின் சம்மணமிட்டு அமர்ந்து மக்களிடம் அவர்கள் சம்மந்தப்பட்ட விஷயங்களை பேசுவார்கள். அன்று இரவு தோழர்கள் கண்ட கனவை விசாரித்து விளக்கம் கூறுவார்கள்.

292. ஒட்டகை, குதிரை, கழுதை, கோவேறுகழுதை போன்ற பல வாகனங்களை பயன்படுத்தினாலும், குதிரையை மிகவும் நேசித்தார்ககள். குதிரையின் கண், மூக்கு, வாய் இவைகளை தங்கள் கையாலே துடைத்து சுத்தம் செய்வார்கள். அதன் பிடரி முடியை விரல்களால் கோதுவார்கள்.

293. நபியவர்கள் சகுனம் பார்க்கமாட்டார்கள். துர்சகுனங்களைப் பொருட்படத்தமாட்டார்கள். ஆனால் நற்சகுனங்களை விரும்புவார்கள். உதாரணமாக பயணத்தில் தாங்கள் தங்கும் இடத்தின் பெயர். இன்னும் ஒரு முக்கியமான வேலையை பொறுப்பேற்றுக் கொள்ளும் நபரின் பெயர்

இவற்றை விசாரிப்பார்கள். வெற்றி, மகிழ்ச்சி போன்ற நல்ல பெயராக இருந்தால் மகிழ்ச்சி அடைவார்கள்.

294. நபியவர்கள் தோட்டங்களில் சென்று உலாவி வருதை மிகவும் விரும்புவாாகள்.

295. நபியவர்களுக்கு நீச்சலும் மிகவும் பிரியமாக இருந்தது. பெரிய குளங்களில் நண்பர்களோடு சேர்ந்து நீந்துவார்குள். நீச்சலில் ஒருவொருக்கொருவர் போட்டி போட்டு விரைந்து சென்று தோழரின் பிடரியை தொடுவார்கள்.

296. நபியவர்கள் தோழர்களிடம் நகைச்சுவையாகப் பேசிய நான்கைந்து சம்பவங்கள் உள்ளன. எனினும் உண்மையைத் தவிர வேறு எதுவும் பேசமாட்டார்கள். நகைச்சுவைக்காகப் பொய் பேசுவது, புறம் பேசுவது, பிறரைக் கிண்டல் செய்வது, பிறரை வெட்களம் அடையச் செய்வது போன்றவற்றை கடுமையாக கண்டித்து இருக்கிறார்கள்.

297. நபியவர்கள் அன்னியப் பெண்ணின் விரலைக் கூட ஒருபோதும் தொட்டதில்லை.

298. அடிமைகள் இன்னும் சாதாரண மனிதர்கள் விருந்துக்கு அழைத்தாலும் செல்வார்கள்.

299. யாரும் தங்களிடம் காரணம் சொன்னால் உடனே ஏற்றுக் கொள்வார்கள்.

300. அம்பு எறிதல், குத்து சண்டை போன்ற ஆகுமான விளையாட்டுகளைப் பார்ப்பார்கள்.

301. பரம ஏழைகளையும் மட்டமாக கருதாமல் அவர்களையும் தீனின் பக்கம் அழைப்பார்கள். பேரரசர்களுக்கும் அச்சமின்றி இஸ்லாமிய அழைப்பைக் கொடுப்பார்கள்.

302. தன்னுடைய மனைவி மக்களையோ, வேலைக் காரர்களையோ ஒரு போதும் திட்டியதில்லை. இதை ஏன்

செய்யவில்லை? இதை ஏன் இப்படி செய்தாய்? என்று ஒரு போதும் கேட்டதில்லை.

303. யாரைப் பற்றியாவது மக்கள் குறைகூறி, அவரை சபிக்கும் படி கூறினால், அல்லாஹ் அவருக்கு நேர்வழி காட்டட்டும் என்று நல்ல துஆ செய்வார்கள்.

304. இறைப்பாதையில் போர் செய்யும்போதே தவிர வேறு யாரையும் எப்போதும் தங்கள் கைகளால் அடித்ததில்லை.

305. வீட்டுவேலை ஆட்களைப் பற்றி மனைவிமார்கள் குறை சொன்னால் கூட எல்லாம் இறைவனின் விதிப்படிதான் நடக்கிறது. அவரை ஒன்றும் சொல்லாதீர்கள் என்று கூறுவார்கள்.

306. யார் எந்த உதவியை நாடி வந்தாலும் தங்களால் முடிந்த அளவுக்கு உதவி செய்தே அனுப்புவார்கள்.

307. பெரும்பாலும் மௌனமாகவே இருப்பார்கள். அவசியம் ஏற்பட்டால் மட்டுமே பேசுவார்கள்.

308. நபியவர்கள் புதிய ஆடை அணிந்தால், பழைய ஆடையை ஏழைகளுக்கு கொடுத்துவிடுவார்கள்.

